**இராமலிங்க சுவாமிகள், சிதம்பரம்.**

**1662.** i. திருவருட்பா திருமுறைத் திரட்டு ; ii. எஸ்.பி. இராஜாராம், ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; iii. 1901 ; iv. செ.மூ.உ.எ. 363 ; v. 22×13 செ.மீ.; vi. 0-3-0 ; vii. திருவருட் பிரகாச வள்ளலார் என்று போற்றப்பெறும இராமலிங்க சுவாமிகளின் திருவருட்பாவில் இது ஒரு பகுதி. இதில் எழுத்தறி பெருமான் மாலை, நெஞ்சோடு நேர்தல், தியாக வண்ணப் பதிகம், திருவண்ண விண்ணப்பம் முதலிய பல பகுதிகள் உள்ளன. இவை உரையுடன் அமைந்துள்ளன. இவ்வுரையினை எழுதியவர் மா. வடிவேலு முதலியார் ஆவார். viii. 44/1901/ III.

O31,1x

**1663.** i. திருவருட்பாத் திரட்டு ; ii. பழனி வேலாயுத முதலியார் & ப. சுப்பிரமணிய முதலியார் ; கணேச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1903 ; iv. செ.மூ.ப. 142 ; v. 16×12 செ.மீ.; vi. ......; vii. இராமலிங்க வள்ளலார் பாடிய திருவருட்பாக களினின்றும் திரட்டப்பெற்ற தொகுப்பு நூல். தினமும் பாராயணம் செய்வதற்கு உபயோகமாக இயற்றப்பெற்றது. viii. 95/ 1903/II.

O31,1x

**1664.** i. திருவருட்பா-திருமுறைகள் முழுதும் (முதற் சஞ்சிகை) மூலமும் உரையும் ; ii. சை. ர. நமசிவாய செட்டியார் ; iii. நவம்பர், 1904 ; iv. செ.மூ.உ.எ. 64 ; v. 24×18 செ.மீ.; vi. 0-4-0 ; vii. ஜீவகாருணிய ஒழுக்கம், திருவடிப் புகழ்ச்சி, விண்ணப்பக் கலிவெண்பா என்னும் மூன்றும காஞ்சீபுரம் இராமசாமி நாயுடு எழுதிய அரும்பொருள் விளக்கத்துடன் உள்ளது. சஞ்சிகையாக வெளிவருவதில் இது முதற் சஞ்சிகை. viii. 132/1905/IV.

O31,1x

**1665.** i. திருவருடபா—திருமுறைகள முழுதும் (இரண்டாம் சஞ்சிகை) மூலமும் உரையும் ; iii. 1904 ; iv. செ.மூ.உ.எ 64 ; vii. விண்ணப்பக் கலிவெண்பாவின் பிற்பகுதி உரையும் நெஞ்சறிவுறுத்தல் முற்பகுதி உரையும் இச் சஞ்சிகையில் உள்ளன. viii. 133/1905/IV.

O31,1x

**1666.** i. திருவருட்பா—திருமுறைகள் முழுதும (3-ம் சஞ்சிகை)—மூலமும் உரையும்; iii. ஜனவரி, 1905 ; iv. செ மூ.உ.எ. 64 ; vii. இதில் நெஞ்சறிவுறுத்தலின பிறபகுதி உரையும், அரன்வாயல் வேங்கிடசுப்புப்பிள்ளை தொகுத்த நெஞ்சறிவுறுத்தல் வசனமும், சிவநேச வெண்பா முற்பகுதி உரையும உள்ளன. viii. 163/1905/IV.

O31,1x

1667. i. திருவருட்பா—திருமுறைகள் முழுதும் (4-ம் சஞ்சிகை) மூலமும் உரையும் ; iii. பிரவரி, 1905 ; iv. செ.மூ.உ.எ. 64 ; vii. இதில் சிவநேச வெண்பாவின் பிற்பகுதி உரையும், மஹா தேவமாலையின் முற்பகுதிக்கு விருத்தியுரையும் உள்ளன. viii. 163A/1905/IV.

O31,1x

1668. i. திருவருட்பா—திருமுறைகள் முழுதும் (5-ம் சஞ்சிகை) மூலமும் உரையும் ; iii. 1905 ; iv. செ.மூ.உ.எ. 64 ; vii. இதில் மஹாதேவமாலையின் பிற்பகுதிக்கு விருத்தியுரை உள்ளது. viii. 163B/1905/IV.

O31,1x

**இராமலிங்கப் பிள்ளை**

1669. i. தோத்திரமாலை ; ii. சண்முகசுந்தர விலாச யந்திரசாலை; சிதம்பரம் ; iii. 1901 ; iv. செ.மூ.ப. 26 ; v. 16×11 செ.மீ.; vi. ...... ..; vii. விநாயகர் பதிகம் (10), சோமேசர் திரு விரட்டைமணி மாலை (20), மீனாக்ஷியம்மை பஞ்சரத்தினம் (5), சுப்பிரமணியர் பதிகம் (10), அடியார் துதி (10) ஆகியவை அடங்கியுள்ளன. viii. 148/1901/III.

O31,1x

1670. i. இலுப்பைக் குடிக்கோவில் சந்நிதிமுறை [இலுப்பைக்குடி வடிவுள்ள சுந்தரவிநாயகர் நவமணி மாலை] ; ii. செக. ராம. அ. ராம. வயிரவன் செட்டியார் ; மீனலோசனி அச்சுக்கூடம், தேவகோட்டை ; iii. 1901 ; iv. செ.மூ.எ. 61+1+4=66 ; v. 16×12 செ.மீ.; vi. ......; vii. பாண்டிநாட்டின் கண்ணுள்ள சூடாமணிபுரம் என்னும் இலுப்பைக் குடிக்கோவில் சந்நிதி முறை, ஏசல், எச்சரிக்கை, ஊஞ்சல், லாலி, தாலாட்டு ஆகியவை அமைந்துள்ளன. viii. 225/1901/III.

O31,1x

**எல்லப்ப நாவலர், சைவ.**

i. அருணசலேசுரர் தோத்திரப் பிரபந்தத் திரட்டு (தொ.எ. 358 பார்க்க); ii. சொ. லோகநாத முதலியார் ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1902 ; iv. செ.மூ.எ. 160 ; vii. சைவ எல்லப்ப நாவலர் பாடிய திருவருணையந்தாதி, திரு வருணைக் கலம்பகம் என்பனவும், நமசிவாய சுவாமிகள் பாடிய சோணப் பிரபந்தம், சிவப்பிரகாசரின் சோணசைல மாலையும் திருச்சிற்றம்பல நாவலர் பாடிய அண்ணாமலைச சதகம் என்பன வும், திருவண்ணாமலைக் கார்த்திகை தீபவெண்பா, சோணசல வெண்பா, சோணசல சதகம், திருவருணைக் கலிவெண்பா, திருவண்ணாமலை திருவருட் பதிகம், அருணாசலீசர் பதிகம், திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர் பதிகம், உண்ணாமுலையம் மன் பதிகம் ஆகியவையும் அடங்கியுள்ளன. முதற்கண் திருவண்ணா

மாலைத் தேவார திருவாசகம், திருப்புகழ்ப்பாடல்கள் தரப்பட்டுள்ளன. இத்தொகுதியின் முதற்கண் குரு நமசிவாயர் சரித்திரமும் அவர் இயற்றிய அண்ணாமலை வெண்பாவும் உள்ளது. மேலும் குகை நமசிவாயர் செய்த அருணகிரியந்தாதி, திருவருணைத் தனிவெண்பா என்பனவும் உள. திருவண்ணாமலைத் தீப தரிசன சுருக்கமும் உரைநடையில் உளது. viii. 131/1903/I.

O31,1x

**ஔவையார் முதலியோர்**

1671. i. சைவ தோத்திரமஞ்சரி [விநாயகரகவல் முதல் திருத்தொண்டத் தொகை ஈறாகப் பதினைந்து நூல்கள்] ; ii. க. வ. திருவேங்கட நாயுடு—எஸ். மூர்த்தி அண்டு கோ ; கபாலி பிரஸ், சென்னை ; iii. 1906 ; iv. செ.மூ.டி. 250 ; v. 15×10 செ.மீ.; vi. ........; vii. விநாயகர், சுப்பிரமணியர், சிவபெருமான், உமாதேவியார், இலக்குமி தேவியார் சரஸ்வதி தேவியார், நாயன்மார்கள் ஆகியோரைப்பற்றிய 15 பிரபந்தங்கள் இதன்கண் உள்ளன. இது சிதம்பரம் ஈசானியமடம் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் பதிப்புக்கு இணங்க வெளியிடப்பெற்ற பதிப்பு. viii. 201/1907/I.

O31,1x

**கங்காதரநாவலர், கி. ஊ. பா., சேத்துப்பேடு, சென்னை.**

1672. i. சித்தி விநாயகக் கடவுளின் ஸ்தோத்திர பூஷணம் ; ii. ஸ்ரீ ஜெயவிநாயக சிவப்பிரகாச அச்சுக்கூடம், சென்னை; iii. நவம்பர், 1910 ; iv. செ.மூ.எ. 10 ; v. 21×14 செ.மீ.; vi. ...... ; vii. சித்தி விநாயகரைக் குறித்த சோடசம் (16), சின்மயானந்தப் பதிகம் (11), நவமணிமாலை (9) என்னும் மூன்றுவகையான பிரபந்தங்கள் உள்ளன. ஈற்றில் சில கீர்த்தனைக் கவிகளும் அமைந்துள்ளன. இவையெல்லாம் சித்திவிநாயகரைக் குறித்த துதி கவிகளாகும். இங்கே குறித்த சித்தி விநாயகர் தென்னுப்பிரிக்காவிலே டர்பன் நகரைச் சார்ந்த வெறளம் என்னும் இடத்தில் விளங்குபராவர். viii. 543/1910/IV.

O31,1x

1673. i. சித்திவிநாயகப் பெருமானின் துதிப் பாமாலை ; ii. ஜெய விநாயக சிவப்பிரகாஸ அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1910 ; iv. செ.மூ.எ. 35 ; v. 21×14 செ.மீ.; vi ......; vii. தென்னுப்பிரிக்காவிலே டர்பன் நகரைச் சார்ந்த வெறளம் என்னும் இடத்தில் விளங்கும் விநாயகரைக் குறித்த துதிமாலை. இதில் சிவானந்தப் பதிகம், மணிமாலை, சதகம், போற்றித் தேவாரம் என்னும் சிறு பகுதிகள் உள்ளன. viii. 518/1910/IV.

O31,1x

1674. i. சிவஞானோதயமணி; ii. ஸ்ரீ ஜெயவிநாயகசிவப்பிரகாசஅச்சுக்கூடம், சென்னை; iii.1910; iv. செ.மூ.ப. 92 ; v. 22×14 செ.மீ. vi. ........; vii. 'சென்னைத் திருமயிலை ஸ்ரீ கபாலீஸ்வரர் சிவஞானோதய மணி என்பது இதன் முழுப் பெயர். இது விநாயக வணக்கம் 'ஜெய விநாயகக் கடவுளே' என்னும் விளியுடன் முடிவுறும் பன்னிரு சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தப் பதினாறு கொண்டுள்ளது. இது சோடசமாலை என்னும் தலைப்பில் தரப்பெற்றிருக்கிறது. இம்மாலையைத் தவிர, சிவப்பிரகாசப் பொருள் வணக்கம், மஹாதேவமாலை, சுவசங்கரமாலை, சிவானந்தமாலை, இம்பில், குரவை, மனத்திற்குபதேசித்தல், உபதேசமாலை, மனம் வயப்பட வலியயெடுத்துரைத்தல், சரணப் பஞ்சகம் என்னும் பகுதிகள் உள்ளன. viii. 612/1910/III.

031,1x

**கந்தசாமிக் கவிராயர், மு. ரா.—தொ.து.**

1675. தனிச் செய்யுட் சிந்தாமணி : முதற்பாகம் ; ii. விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1908 ; iv. செ.மூ.எ. 3815 ; v. 22×15 செ.மீ.; vi. 3-0-0 ; vii. முற்கால பிற்காலப் புலவர் பெருமக்கள் பற்பல சந்தர்ப்பங்களில் பாடிய பாக்களின் கோவை. தனிப்பாடல் பற்றிய விவரங்களையும் அதனைத் திரட்டிய முயற்சிகளைப்பற்றி மு. இராகவையங்கார் எழுதிய முகவுரையில் விவரித்துள்ளார். 182 புலவர்களின் தனிப் பாடல்கள் இத்தொகுதியில் தரப்பட்டுள்ளன. viii. 11/1908/IV

031,1x

**கந்தப்ப தேசிகர், தி.**

1676. i. திருத்தணிகைச் சந்நிதி முறை ; ii. சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1904 ; iv. செ.மூ.எ. 147; v. 22×14 செ.மீ. ; vi........; vii தணிகைப்பிள்ளைத் தமிழ் முதல் உலா ஈருகப் பன்னிரண்டு பிரபந்தங்கள் உள்ளன. இவையாவும் தணிகை முருகன் புகழ் பாடுவனவாம். viii. 169/1905/I.

031,1x

**கேசவ சுப்பராய செட்டியார், பொ.மு.**

1677. i. பகவத் தோத்திர பிரபந்தம் ; ii. எஸ். இரத்தினவேலு செட்டியார் & வே. இ நாராயணசாமிப் பிள்ளை ; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1905 ; iv. செ.மூ.ப. 16+166 ; v. 22×14 செ.மீ. ; vi. ........; vii. இதில் இராமாயண சதகம், ஸ்ரீ கண்ணபிரான் பதிற்றுப்பத்து, ஸ்ரீ ருக்மணி பதிகம், ஸ்ரீ கண்ணபிரான் நாமாவளி, ஸ்ரீ கண்ணபிரான் தாலாட்டு, ஸ்ரீ கண்ணபிரான் கொம்மி ஆகியவை அடங்கியுள்ளன. viii.229/1905/III.

031,1x

சக்கரபாணி ஆச்சாரியார், ஜெ., ஊஞ்சலூர்—தொ.து.

1678. i. தேவாரத் திரட்டு ; ii. எஸ். எல். ஈ. பிரஸ், தாராபுரம் ; iii. 1909 ; iv. செ.மூ.எ. 8+6+3+7+10+8 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. பிரைமரி பாடசாலைகளின் உபயோகத்திற்காகத் திரட்டப்பெற்றது. தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, தாயுமான சுவாமிகள் பாடல் ஆகியவற்றினின்று திரட்டப்பெற்றது. viii. 460/1909/II.

031,1x

சூடாமணி ஓதுவார், பி., கடம்பூர்—தொ.து.

1679. i. திருப்புகழ் பலதிரட்டு : முதற் பதிப்பு ; ii. பி. சூடாமணி ஓதுவார் ; வாணி விலாஸம் பிரஸ், திருநெல்வேலி ; iii. 1909 ; iv. செ.மூ.ப. 32 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. பற்பல பிரதிகளிலிருந்தும் திரட்டி வெளியிடப்பெற்றது. viii. 152/1910/I.

031,1x

சோணாசல பாரதி

1680. i. கம்பைச் சந்நிதி முறை ; ii. சென்னை கலாரத்நாகர அச்சுக்கூடம் ; iii. 1903 ; iv. செ.மூ.எ. 19+376 ; v. 15×11 செ.மீ. ; vi. .......... ; vii இந்நூலில் பிள்ளைத்தமிழ் (100), அலங்காரம் (100), வெண்பா மாலை (101), தாலாட்டு (50), திருப்பள்ளியெழுச்சி (10), பெரிய கட்டியம் (10), குயிற்பத்து (10), கிளிப்பதது (10), வண்டுவிடு தூது (10), எச்சரிக்கை (12), வண்ணத்தாழிசை (12), ஊசல் (10), பெருங்கழி நெடில் விருத்தம் (10), அடைக்கலப்பத்து (10), போற்றிக் கலிவிருத்தம் (10), திருப்புகழ் (10), தண்டாயுத பாணி பதிகம் (11) ஆகியவை அடங்கியுள்ளன. இவையாவும் இரங்கோன நகரத்தை அடுத்துள்ள கம்பை என்னும் தலத்து விளங்கும் முருகப்பெருமான துதியாக உள்ளன. viii. 51/1903/IV.

031,1x

தண்டபாணி சுவாமிகள்

1681. i. குமாரகுருதாச சுவாமிகள் பாடல், திருவலங்கற்றிரட்டு—முதலாம் கண்டம்: முதற் பதிப்பு ; ii. தி. உடையநாயகம் பிள்ளை; பண்டித மித்திரவச்சுக்கூடம், சென்னை; iii 1901 ; iv. செ.மூ.ப. 400 ; v. 16×13 செ.மீ. ; vi. 1–2–0 ; vii. முருகப் பெருமானைப்பற்றிய துதி கவிகள். திருப்பரங்கிரி, திருச்செந்தில், திருவேரகம் முதலிய பலஊர்ப் பெருமான்மேல் பாடப்பெற்றவை. சதகம், கண்ணி, முறையீடு முதலியனவாக உள்ளன. viii. 168/1901/I

031,1x

1682. i. திருவலங்கற்றிரட்டு—இரண்டாம் கண்டம் : முதற் பதிப்பு ; iii. 1902 ; iv. செ.மூ.எ. 532 ; vii. இரண்டாம் கண்டம் 'பஞ்ச சந்த பரிமாணம்' என்றும் கூறப்பெறும்; 532 செய்யுட்களை உடையது. யாப்பிலக்கணத்தில் வரும் சந்தேகங்களை ஒழித்து உண்மையை உணர்த்துவது செய்யுட் பேதங்கட்கும் அரிய சித்திரக் கவிகட்கும் மேற்கோளாகவும் ஸ்ரீ சுப்பிரமணியர் தோத்திரமாக வும் சிவ யோக ஞான சாஸ்திரமாகவும் அமைந்துளளது. viii. 101/1902/I.

031,1x

1683. i. தனிப்பாடற்றிரட்டு : இரண்டாம் பாகம் ; ii. வித்யாரத்நாகரம் பிரஸ், சென்னை ; iii. 1902 ; iv. செ.மூ.உ.எ. 850 ; v. 21×14 செ.மீ. ; vi. 1—0 ; vii. பல வித்துவான்கள் பாடிய அரும்பொருட்சுவை அமைந்த பாடல்களும், பல சந்தர்ப்பங்களில் பாடிய பலசுவைப் பாடல்களும் சித்திரக்கவிகளும் அடங்கிய தொகுதி. நூல் முழுமைக்கும் மகாவித்துவான் கா. இராமசாமி நாயுடுவின் உரை உள்ளது. viii. 17/1902/II.

031,1x

தாயுமானவ சுவாமிகள்

1684. i. தாயுமான சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு. [அருள் வாக்கிய அகவல்] ; ii. மதராஸ் ரிபப்ளிக் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1905 ; iv. செ.மூ.உ.ப. 452 ; v. 15×11 செ.மீ. ; vi. .. ; vii. கலகுளம் குப்புசாமி முதலியார் எழுதிய ஆசிரியர் வரலாறு நூலின் முகப்பில் உள்ளது. முதல் மூன்று பாடல்களுக்குப் புரசை, அஷ்டாவதானம் மகாவித்வான சபாபதி முதலியார் இயற்றிய உரையும், ஏனையவற்றிற்கு காஞ்சிபுரம் மகாவித்வான இராமசாமி நாயுடு எழுதிய அரும் பதவுரையும் உள்ளன. ஈற்றில் அருளையர் என்பவரால் பாடப் பெற்ற தாயுமானவரைத் துதிக்கும் அகவற்பாடல் ஒன்றும் உள்ளது. viii. 236/1906/I.

031,1x

திருஞானசம்பந்தர் முதலியோர்

1685. தேவாரம், திருவாசகம் முதலிய தமிழ் வேதத் திருமுறைத் திரட்டு ; ii. ஸ்ரீ கணேச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1910 ; iv. செ.மூ.ப. 245 ; v. 17×13 செ.மீ. ; vi. .... ...... ; vii. தேவாரம், திருவாசகம் முதலிய சைவத் திருமுறைகளினின்று திரட்டப்பெற்ற பாடல்களின் தொகுதி. பன்னிரு திருமுறைகளினின்றும் முக்கியமானவைகள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. சம்பந்தர் முதலிய சமயாசாரியர் நால்வர் சரித்திரங்களும் தரப்பட்டுள்ளன. அருணகிரியாரின் திருப்புகழ் திருவகுப்பு பாடல்களினின்றும் சில செய்யுட்கள் தேர்ந்தெடுத்து இதன் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 126/1910/II.

031,1x

**நாகலிங்கம் பிள்ளை, துறையூர்.**

1686. i. முருகூரினகண எழுந்தருளியிருககும் ஸ்ரீ சநநிதி விநாயகா பதிகம் முதலியன ; ii. ஸ்ரீ விதநியா விநோதினி அசசுக்கூடம, தஞ்சை ; iii. 1910 ; iv. செ.மூ.ப. 27 ; v. 21×14 செ.மீ. ; vi. .......... ; vii. சந்நிதி விநாயகர் பதிகம், சிறறம்பலநாதா பதிகம், சிவகாமியம்மை பதிகம், வரதராசப் பெருமாள் பதிகம எனனும் நானகு பதிகங்களும், சிவசண முகர் பஞசரத்தினம் எனனும் பிரபநதமும், பரிவார தேவதைகள் தோததிரமும் அமைந்துளளன. viii. 349/1910/II.

**O31,1x**

**பட்டினத்துப் பிள்ளையார்**

1687. i. பட்டினததுப்பிள்ளையாா திருப்பாடற்றிரட்டு (கோயிற்றிருவகவல்) ; ii. ........ ; iii. 1906 ; iv. செ. மூ. உ. ப. 384—399=16 ; v. 22×14 செ.மீ. ; vi. ............ ; vii. கோயில் திருவகவில் முதலாவதும், இரண்டாவதும் உரையுடன் உள்ளன. viii. 285/1906/II.

**O31,1x**

1688. i. பட்டினத்துப்பிள்ளையார் திருபபாடற்றிரடடு [உடற்கூற்று வண்ணமும் அவர் சரிததிரச்சுருக்கமும்] ; ii. பெ. பார்த்தசாரதி ஐயஙகார் ; டெயிலா ஒர்கஸ, செனனை ; iii. 1906 ; iv. செ.மூ.ப. 37 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. கோயில் திருவகவல் முதலிய அகவல்களும, திருவேகம்ப மாலையும், தில்லை முதலிய தலங்களைக் குறிதத துதிப்பாடலகளும் உளளன. தாயாருக்குத தகனககிரியை செய்கையிற் பாடிய வெண்பாக்களும றறில் இடம் பெறறுளளன. viii. 195/1906/III.

**O31,1x**

1689. i. பட்டினத்துபபிளளையார் திருப்பாடறறிரடடு ; ii. திருநாகேஸ்வர முதலியாா ; ஜீவகாருண்ய விலாச அசசுக்கூடம ; iii. 1906 ; iv. செ.மூ.ப. 56 ; v. 26×19 செ.மீ ; vi. ........; vii. திருவொற்றியூர்த் தொகை, கோயிற்றிருவகவல், திருவேகம்பமாலை, திருததில்லை முதலியவை பற்றிய பாடல்கள், தாயாருக்குத் தகனகிரியை செய்கையில் பாடிய வெண்பாக்களும் அமைந்துள்ளன. viii. 334/1906/III.

**O31,1x**

1690. i. பட்டினத்துபபிளளையார் திருப்பாடற்றிரட்டு ; iii. ஆகஸ்டு, 1906 ; iv. உ.ப. 16+செ.மூ.ப. 16 ; vii. தொழுவூர் வேலாயுத முதலியாரால் வெளியிடப்பட்ட முதற பதிப்பிறகு இணங்கச் சஞ்சிகையாக வெளியிடப்பெறும் நூலின் 7-ஆவது சஞ்சிகை. viii. 335/1906/III.

**O31,1x**

1691. i. பட்டினத்துப்பிள்ளையார் பாடல் [பட்டினத்துப்பிள்ளையார் புலம்பல் முதலியன] ; ii. கே. பி. சிங்காரவேலு முதலியார் ; ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1908 ; iv. செ.மூ.ப. 168 ; v. 16×13 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. கோயில், ஏகம்பம் முதலிய தலங்களிலுள்ள சிவபெருமானைப் போற்றித் துதிக்கும் துதிப் பாமாலை. ஞானாதத்தீபம் என்னும் உரையுடன் கூடியது. இவ்வுரையை எழுதியவர் சித்தாந்த சரபம், அஷ்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார் ஆவர். viii. 16/1908/III.

O31,1x

பலராம ஐயர், ந.

1692. i. தாமரை நாண்மலர் ; ii. தி. அ. சுவாமிநாதையர் ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. 1901 ; iv. செ.மூ.எ. 160 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. ஆசிரியர் பல வேறு சந்தப்பங்களில் பல்வேறு பொருள் பற்றிப் பாடிய பாடல்களின் தொகுதி. viii. 155/1901/III.

O31,1x

பாண்டித்துரைத் தேவர்—தொ.து

1693. i. தோத்திரத்திரட்டு ; ii. தமிழ்ச் சங்க முத்திராக்ஷரசாலை, மதுரை ; iii. 1907 ; iv. செ.மூ.ப. 120 ; v. 14×12 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. ........ ; viii. 554/1908/IV.

O31,1x

1694. i. பன்னூற்றிரட்டு : இரண்டாம் பதிப்பு ; ii. மதுரைத் தமிழ்ச் சங்கம் ; தமிழ்ச் சங்க முத்திராக்ஷரசாலை, மதுரை; iii. 1906 ; iv. செ.மூ.ப. 2132 ; v. 22×14 செ.மீ. ; vi. 2–0–0 ; vii. ........ ; viii. 541/1908/IV.

O31,1x

1695. i. பன்னூற்றிரட்டு ; ii. பி பாண்டித்துரைத் தேவர் ; தமிழ் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. 1908 ; iv. செ.மூ.எ. 69 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. பற்பல நீதி நூல்களிலிருந்து திரட்டி எழுதப்பெற்றது. பாண்டித்துரைத் தேவர் தொகுத்த இத்திரட்டு நூலின் 6, 7, 8, 9-ஆம் அதிகாரங்கள் இச்சிறு நூலில் உள்ளன. இது 1911-ஆம் ஆண்டு எப்.ஏ. தேர்விற்காக இயற்றப்பெற்றது. viii. 686/1909/IV.

O31,1x

**பிள்ளைப்பெருமாளையங்கார்**

1696. **i.** அஷ்டப்பிரபந்தம் [திருவரங்கக் கலம்பகம் முதல் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி வரை 8 பிரபந்தங்கள்] எட்டு நூல்கள; **ii.** குப்புசாமி முதலியார், ஆலகுளம்; ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை; **iii.** 1904; **iv.** செ.மூ.எ. 808; **v.** 18×12 செ.மீ.; **vi.** 0-8-0; **vii.** பிள்ளைப்பெருமாளையங்கார் சரித்திரம் முகப்பில் உள்ளது. திருவரங்கக் கலம்பகம் முதலிய எட்டு நூல்கள் இதன்கண் உள. இவையாவும் திருமால் துதியாக உள்ளன. முக்கியமாகத் திருவரங்கம், திருவேங்கடம், அழகர்மலை என்னும் சோலைமலை என்னும் பதிகளில் எழுந்தருளியிருக்கும் பெருமானைப் பற்றியவை. தமிழகக்கவிமாலை என்னும் பதிப்பு வரிசையில் இது இரண்டாவது மலர் ஆகும் **viii.** 49/1905/I.

**O31,1x**

**பூர்ணலிங்கம் பிள்ளை, எம். எஸ்.**

1697. **i.** விவேக விளக்கம்—பாடப்புத்தகம்: இரண்டாம் பதிப்பு; **ii.** மினர்வா பிரஸ், சென்னை; **iii.** 1903; **iv.** செ.மூ.உ.ப. 92; **v.** 19×13 செ.மீ.; **vi.** ..........; **vii.** முதல் நான்கு பார மாணவர்களுக்கு உபயோகமாகச் செய்யப்பெற்றது. விவேக சிந்தாமணி முதல் மனோன்மணீயம் ஈறாக 20 நூல்களினின்றும் பாடல்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ளன. பாடல்களுக்குக் குறிப்புரையும் ஈற்றில் உள்ளது. **viii.** 169/1903/I.

**O31,1x**

**பெருமாளய்யங்கார்**

1698. **i.** பலதிரட்டு மங்களப் பிரபந்தம் ஸ்ரீராம நித்யாநுஷ்டான சரித்திரம் [நவக்கிரக மாலை........]; **ii.** மதுரை ஸ்ரீ ருக்மணி விலாஸம் பிரஸ், மதுரை; **iii.** 1910; **v.** செ.மூ.எ. 9+23+2; **v.** 21×14 செ.மீ.; **vi.** ..........; **vii.** ஸ்ரீராம நித்யாநுஷ்டான சரித்திரம், ஸ்ரீ விஷ்ணு துவாதச நாம மாலை, திருநகரி முதலான திவ்ய தேசத்தெம்பெருமான் விஷயம், நவக்கிரகமாலை, ஆஞ்சநேயமாலை, சடகோபமாலை, சிறுத்தொண்டன் சரித்திரம் என்னும் சிறு நூல்கள் அடங்கிய தொகுதி. இவற்றுள் சிறுத்தொண்டன் சரித்திரம் என்பது பரஞ்சோதி எனும் பெயர் பூண்டு சோழசேனாதிபதியாய்ப் பணியாற்றி, பின் சிவபக்தனான சிறுத்தொண்ட நாயனார் சரித்திரம் பற்றிய கீர்த்தனைக் கவிமாலை. ஏனையவை திருமாலின் புகழினைப் போற்றித் துதிப்பது. **viii.** 540/1910/IV.

**O31,1x**

**தான் சாகிபு**

[16]99. i. மஸ்தான் சாகிபு திருப்பாடற்றிரட்டு ; ii. எம்.எ. நெயினு முகம்மது பாவலர் ; திரிபுரசுந்தரி விலாசம ப்ரஸ், சென்னை ; iii. ஆகஸ்டு, 1905 ; iv. செ.மூ.உ.எ. 1011 ; v. 22×14 செ.மீ. ; vi. 2-0-0 ; vii. தாயுமானவர் பாடல் போன்று பல்வேறு வகை அமைப்புக்களையும் சந்தங்களையும் பொருள்களையும் கொண்ட பாடல்களின் தொகுதி. இதற்கு காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு செய்த பதவுரை முதலியவற்றுடன் அமைந்துள்ளது. viii. 221/1905/III.

**O31,1x**

1700. i. மஸ்தான் சாகிபு திருப்பாடற்றிரட்டு மூலம்—இரண்டாம பாகம் ; ii. சுப்பராய முதலியார் அண்டு கம்பெனி, திரிபுர சுந்தரி விலாசம் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1905 ; iv. செ.மூ.ப. 68 ; v. 22×14 செ.மீ. ; vi. .. ..... ; vii. மஸ்தான் சாகிபுவின் தோத்திரபாடலின் இரண்டாம் பகுதி. காஞ்சிபுரம் இராமஸ்வாமி நாயுடு செய்த பதவுரை முதலியவற்றுடன் அமைந்தது. viii. 299/1905/III.

**O31,1x**

1701. i. **மஹாநவராத்திரி மஹோத்ஸவ பாடல்கள்** ; ii. மு. ரா. கந்தசாமிக் கவிராயா ; விவேகபாநு அச்சியந்திரசாலை ; iii. 1910 ; iv. செ.மூ.எ. 98 ; v. 22×14 செ.மீ. ; vi. ........... ; vii. சேது சமஸ்தானத்திலே ஸாதாரண வருஷம், மஹா நவராத்திரி மஹோத்ஸவம் பற்றி அமைந்த வாழ்த்துக் கவிகளின் கோவை. இந் நவராத்திரி வைபவ நிகழ்ச்சிபற்றி மு. ரா. கந்தசாமிக் கவிராயா விரிவாக முகவுரையில் எழுதியுள்ளார். மகாராஜா முத்துராமலிங்க சேதுபதி மேஜராகியதும் நடத்திய முதல் விழா இது. இதில் கலந்துகொண்ட புலவாகள் சேதுபதிமேல் வாழ்த்துக் கவிகள் பல பாடினர். இப்பாடல்களின் கோவையே இந்நூல். இதக சமஸ்தான வித்வான் ரா. ராகவையங்கார் சேதுபதி மேல் 200 கவிகள் கொண்ட ஒரு துறைக் கோவையும் வேம்பத்தூர் பிச்சு பாரதிகள் பாடிய ஜெயசிங்க மாலையும் இவ்விழாவில் விஜயதசமியன்று அரங்கேற்றப்பெற்றன. viii. 403/1910/III.

**O31**

**மாம்பழக் கவிச்சிங்கநாவலர், மு., பழநி.**

i. தனிச் செய்யுட் கோவை—சீட்டுக்கவித் திரட்டுடன் (மு
1702 பாகம்) ; ii. எம்.பி. பழநிச்சாமியாசாரி ; விவேக அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1908 ; iv. செ.மூ.எ. vii. இராமநாதபுர சமஸ்தானாதிபதி பொன்னுசாமித் ...

முதலிய பிரபுக்கள் மேலும், வேறுபல சந்தர்ப்பங்களிலும் பாடிய பாடல்கள் இதில் உள்ளன. சீட்டுக் கவிகள், பிராது விண்ணப்பங்கள் முதலியனவும் இடம் பெற்றுள்ளன. viii. 158/1903/III.

O31,1x

1702. i. பிரபந்தத்திரட்டு—முதற்பாகம்—இரண்டாம் பாகம் ; ii. எம். பி. பழநிச்சாமியாசாரி, பழநி ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1908 ; iv. செ.மூ.எ. 1508 ; v. 25×19 செ.மீ. ; vi. 2-8-0 ; vii. பழநிச்சாமியாசாரியாரால் தொகுக்கப்பெற்றது. 'விநாயக மூர்த்தி பதிகம் முதல் தங்கப்பாட்டுகள் ஈறுக' 25 பிரபந்தங்கள் உள்ளன. மாம்பழக்கவிச்சிங்க நாவலரின் சரித்திரச் சுருக்கமும் நூல் முகப்பில் உள்ளது. பல புலவர்கள் இப்பதிப்பாசிரியருக்கு அளித்த சிறப்புப் பாயிரக் கவிகளும் நூல் முதலில் தரப்பட்டிருக்கின்றன. viii. 158/1908/III.

O31,1x

**மீனாட்சிசுந்தரம் பிள்ளை, திரிசிரபுரம்.**

1703. i. பிரபந்தத்திரட்டு ; ii. வே. சாமிநாத அய்யர், உத்தமதானபுரம் ; வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை. iii. 1910 ; iv. செ.மூ.ப. 724 ; v. 22×14 செ.மீ. ; vi. 2-8-0 ; vii. திருவாவடுதுறை ஆதீனத்தில் மகாவித்வானாக விளங்கிய மீனாட்சிசுந்தரம்பிள்ளை பாடிய பிரபந்தங்களின் கோவை. பூர்த்தியான நூல்கள் முப்பத்தைந்தும், பூர்த்தியாகாத நூல்கள் மூன்றும், பூர்த்தியான பஞ்சரத்நம், பூவாளூர் பதிற்றுப் பத்தந்தாதிகளில் அகப்பட்ட பகுதிகளும் இத்திரட்டு நூலில் இடம் பெற்றுள்ளன. சீகாழிக் கோவையும், வியாசைக்கோவையும் தனித் தனியே பதிப்பிக்கப் பெற்று அகப்படக்கூடிய நிலைமையில் இருத்தலின் அவை இதில் சேர்க்கப்படவில்லை. 'உரிய காலங்களில் பிரதிகள் முதலியன அகப்படாமையினால் நூல்களைக் காலமுறையாகவும், பிரபந்த முறையாகவும் சேர்க்கப்படவில்லை' என்று பதிப்பாசிரியர் குறித்துள்ளார். பல பிரதிகளுடன் ஒப்பு நோக்கிப் பதிப்பிக்கப்பெற்ற பதிப்பு. viii. 658/1910/II.

O31,1x

**முத்துஸாமி ஐயர், வே., வேலூர்.**

1704. i. தனிப்பா நாற்பது ; ii. விக்டோரியா அச்சுக்கூடம், வேலூர் ; iii. 1909 ; iv. செ.மூ.எ. 40 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. ஆசிரியர் பிறகாலத்தில் பாடிய தனிப்பாக்களின் தொகுதி. மாணவராக அவர் இருந்த காலத்துப் பாடிய பாடல்கள் சில வற்றையும் இதில் சேர்த்துள்ளார். பாடல்கள் பாடப்பெற்ற சந்தர்ப்பங்களை விளக்கும் குறிப்புகள் அங்கங்கே தரப்பட்டிருக்கின்றன. viii. 246/1909/II.

O31,1x

**முத்துராமலிங்க சுவாமிகள், சிதம்பரம்.**

1705. i. தோத்திரத்திரட்டு ; ii. லோ. மு. தணிகாசல முதலியார், வேலூர் ; வாணி நிகேதன அச்சியந்திரசாலை ; iii. 1910 ; iv. செ.மூ எ. 27 ; v. 13 × 11 செ.மீ. ; vi. ........ ; vii. சைவ சமயாசாரியராகிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசக சுவாமிகள் ஆகியோரைக் குறித்த தோத்திரப் பாமாலைகளும், தாயுமான சுவாமிகள் தோத்திரப் பாமாலையும் இதன்கண் உள. இந்தச் சுவாமிகள் அருளிய நீதி மொழிகள் இருபத்தைந்து கண்ணிகளில் அமைந்துள்ளன. viii. 75/1910/III.

031,1x

**முத்துவீர நாவலர், பூஞ்சோலை.**

1706. i. திருப்போரூர் சண்முகக் கடவுள் தசாப்தாநுசரம் [நவமணிமாலை, திருப்போரூர் தெய்வமணித் தெரியல் முதலியன]; ii. பா. அப்பு பிள்ளை, சென்னை ; பூலோக வியாஸன அச்சுக்கூடம், சென்னை ; iii. 1910 ; iv. செ.மூ.ப 56 ; v. 21 × 13 செ.மீ. ; vi. ......... ; vii. அப்பு பிள்ளை என்பவரின் வேண்டுகோளின்படி 1900 முதல் 1909-ஆவது ஆண்டுவரை மாசி மகோற்சவக் கிருத்திகை தோறும் பாடி அச்சிட்டு அடியார்களுக்கு விநியோகம் செய்த பத்துச் சிறு புத்தகங்களின் தொகுதி. அவையாவன: (1) திருப்போரூர் முருகக் கடவுள் நவமணி மாலை, (2) திருப்போரூர் தெய்வமணித் தெரியல், (3) திருப்போரூர் முருகக் கடவுள் தோத்தரத்தயம், (4) திருப்போரூர் முருகக்கடவுள் மனுப்பா வலங்கல், (5) திருப்போரூர் மயில்சிமாலை, (6) திருப்போரூர் முருகக் கடவுள் மணியருப்பாவணி, (7) திருப்போரூர் முருகக்கடவுள் முப்பஞ்சரத்தினம், (8) திருப்போரூர் முருகக் கடவுள் முப்பஃதந்தாதி, (9) திருப்போரூர் முருகக் கடவுள் முற்றுப்பா விருத்தத் துதி, (10) திருப்போரூர் முருகக் கடவுள் மும்மணிப் பத்து. இவையாவும் போரூர் முருகன் புகழினைப் பலபடப் பேசுவது. viii. 398/1910/I.

031,1x

**முனிசாமி முதலியார், மோசூர்.**

1707. i. தொண்டை நாட்டுத் திருப்பதித் தோத்திரக்கோவை; ii. சு. பெ. பொன்னுசாமி முதலியார் ; வெ. நா. ஜூபிலி அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1900 ; iv. செ.மூ ப. 200 ; v. 18 × 11 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. திருக்கச்சி ஏகம்பம் தொடங்கி திருஇருமலப் மாகாளம் ஈறாக உள்ள தொண்டைநாட்டுத் தலங்கள் முப்பத்திரண்டிற்கும் உரிய தோத்திரப் பாமாலை. முதலில் விநாயகக் கடவுள் தோத்திரமும் ஈற்றில் திருப்போரூர், திருத்தணிகை முருகர் தோத்திரங்களும், சமயாசாரியர் நால்வர் தோத்திரங்களும் உள. பல வகைப் பாவினங்களாலும் இயன்ற

திரோட்டகம், இரட்டை மணிமாலை, ஒருபா ஒருபஃது, நவமணி மாலை, பதிற்றுப் பத்தந்தாதி, சோடசப் பாமாலை, கலித்துறை யந்தாதி, மும்மணி மாலை, நான்மணி மாலை, வெண்பாவந்தாதி, பஞ்சரத்நம் என்னும் பிரபந்தங்களும் இதன்கண் உள. viii. 202/1901/I.

O31,1x

**மெய்ஞ்ஞான குஞ்ஞாலி செய்கு முகியித்தின் சாகிபு முதலியோர்**

1708. i. ஞானரத்தின சாகர மதாறியயா : முதல் பதிப்பு ; ii. கண்ணகுமது மகுதூமுகம்மதுப்புலவர் ; ஸ்ரீ பதும விலாச அச்சுக்கூடம் ; iii. 1900 ; iv. செ.மூ.ப. 160 ; v. 22×14 செ.மீ. ; vi. ... .... ; vii. இந்நூலில் குஞ்ஞாலி செய்கு முகியித்தின் ஆலிம் சாகிபு, செய்கு முகம்மதபூபக்கா லெப்பை கலீபா சாகிபு, இன்னும் பல பெரியோர்களின் பாடல்கள் திரட்டி அமைக்கப் பெற்றுள்ளன. 158 தலைப்புக்களில் பாடல்கள் அமைந்துள்ளன. viii. 160/1901/II.

O31,1x

**மோனகுரு செய்குமஸ்தான் சாகிபு, தொண்டி.**

1709. i. திருப்பாடற்றிரட்டு ; ii. பிச்சையிபுறாகீம் புலவர், திருச்சிராப்பள்ளி & செய்யிதிபுறாகிம் ; வி. பி. சாமி பிரதாஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1909 ; iv. செ.மூ.எ. 611 ; v. 17×13 செ.மீ. ; vi. .... .... ; vii. குருவணக்கம், சகல சற்குரு முதலிய தலைப்புக்களில் பலவகையான பாடல்கள் உள. இறுதிப் பகுதியில் ஆசிரியர் பாடிய பல கண்ணிகளும், கீர்த்தனைகளும் இடம் பெற்றுள்ளன. தாயுமானவர் பாடல்களைப் போன்றே இவர் பாடிய பாடல் வகைகளும் போக்கும் அமைந்துள்ளன. இந்நூலாசிரியரைக் குறித்து ஆ. கா. பிச்சையிபுறாகீம் புலவர் இயற்றிய நான்மணி மாலை முதலில் உள்ளது. மேலும் பல புலவர்கள் பாடிய புகழ்ப்பாக்கள் நான்மணி மாலையை அடுத்து உள்ளன. viii. 168/1909/IV.

O31,1x

1710. i. **வதரீசர் பிரபந்தத்திரட்டு** ; ii. பக்தஜன சமூகம ; வைஜயந்தி அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1902 ; iv. செ.மூ.எ. 94 ; v. 16×12 செ.மீ. ; vi. .. ..... .. ; vii. வதரிநகர் என்னும் இலந்தை நகரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிராநின்ற விநாயகக் கடவுள் மீதிலும், சபாநாயகர் மீதிலும் பாடப்பட்ட ஊஞ்சல், எச்சரிக்கை, பராக்கு, லாலி, மங்களம் என்னும் இவை ஒருங்கு சேர்க்கப்பட்டுள்ளன. viii. 86/1902/II.

O31,1x

**வீரப்ப செட்டியார், சி. வீர., கண்டனூர்.**

1711. i. ஷட் பிரபந்தங்கள்; ii. வீ. சுப்பிரமணியச் செட்டியார்; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1909; iv. செ. மூ. ப. 164; v. 17×13 செ.மீ.; vi. . . . . . . . . ; vii. அளகை வெண்பா, அளகைக் கலித்துறை, அளகையுமையந்தாதி, அளகையுமையலங்காரம், குன்றை வெண்பா, குன்றைக் கலித்துறை, என்னும் ஆறு பிரபந்தங்கள் அடங்கியுள்ளன. viii 422/1909/III.

O31,1x

**வெங்கடராமலு நாயுடு, எஸ்.**

1712. i ஸ்ரீரங்கநாயகா பிரபந்தத்திரட்டு; ii. வித்யாரக்ஷணி அச்சியந்திரசாலை, உடுமலைப் பட்டை; iii. டிஸம்பர், 1900, iv. செ. மூ. ப. 13; v. 21×14 செ.மீ; vi . . . . . . . . ; vii ஸ்ரீரங்கநாயகா பதிகம் இரண்டு 1+10+10; திருவரங்கச் சிலேடைப் பஞ்சகம் 5; திருமால் திருப்புகழ் 1+11; கட்டளைக் கலித்துறைப் பதிகம் 1+10; திருவாங்க விரட்டை மணி மாலை 1+20; திருவரங்கச் சிலேடை வெண்பாமாலை 101—என்னும் ஏழுபிரபந்தங்கள் இத்தொகுதியில் உள்ளன. viii. 6/1901/II.

O31,1x

**வேதநாயக சுவாமிகள், எம்.**

1713. i. திரிசிரபுரம் வரகனேரி குழுமியாநந்த சுவாமிகள்பேரில் தோத்திரத்திரட்டு; ii. டாட்ஸன் அச்சியந்திரசாலை, திரிசிரபுரம்; iii. 1909; iv. செ மூ.ப. 32; v. 17×12 செ.மீ; vi. 0-2-0; vii. குழுமியாநந்த சுவாமிகளைக் குறித்த தோத்திரத் திரட்டு. இதில் நெஞ்சறிவுறுத்தல் (10), திரங்கலந்தாதி (11), ஸ்ரீசற்குரு வணக்கம் (10), அடைக்கலப் பஞ்சந்தாதி (10), குழுமியானந்த பதிகம் (10) ஆகியவை உள்ளன. viii. 473/1909/II.

O31,1x

**வைத்திலிங்க சுவாமிகள்**

1714. i திருப்பாடற்றிரட்டு; ii. அருணைசல நாயனுர்; சுதேசாபிமானி அச்சியந்திரசாலை, சேலம்; iii. 1909; iv. செ.மூ.ப. 16; v. 20×14 செ. மீ; vi. 0-6-0; vii. இந்நூலாசிரியருக்கு 'வாலைக் குரு நாயனர்' என்றும் ஒரு பெயருண்டு. தாயுமான சுவாமிகள் பாடற்போக்கு முறையில் அமைந்த தோத்திரப்பாடல்களின் தொகுதி. 'மௌன பொருளே' 'சச்சிதானந்த பொருளே', 'பிர்ம்மமே' முதலியவை பாடல்களின் இறுதிக்

குறிப்பினால் பெயர் பெற்றுள்ளன. 'அறிவிற்கறிவான', 'முழுமுதலே' 'சோதிமவுனி' முதலியவை தொடக்கப் பாடலின் முதற் குறிப்பினால் பெயர் பெற்றவையாம். அகிலாண்ட நாயகியின் மேல் பாடிய துதி கவிகளும் உள. viii. 131/1910/III.

O31,1x

**ஸ்ரீநிவாஸசர்மா, மு. ரா., ஸ்ரீ கௌரி, மாயூரம்.**

1715. i. ஜகத்குரு சங்கர பகவத் பாதாசாரிய ஸ்வாமிகள் பேரில் சற்குருமணிமாலை [ஜகத் குரு சங்கர பகவத் பாதாசாரிய ஸ்வாமிகள் நவமணிமாலை முதலியன]; ii. நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி; iii. 1909; iv. செ. மூ. எ. 1+30+1; v. 18×11 செ. மீ.; vi 0–2–0; vii 'சற்குரு மணியே' என முடியும் முப்பது எழுசீர் ஆசிரிய விருத்தங்கள் கொண்ட துதி மாலை. இது சிருங்கேரிமடம் ஜெகத் குரு சங்கராசாரியாரால் பாடப் பெற்றது. அடுத்துள்ள நவமணி மாலைப் பாடல்களும் 'சற்குருமணியே' என்னும் முடிவு கொண்டுள்ளன. பின்னர், 'அக்ஷரமாலை' என்னும் கண்ணிகள் உள்ளன. இதனை பின் வரும் "ஸ்ரீகுருநாதப் பத்தும்" கண்ணிகளே. நவிரமும், உந்தியார், ஆனந்தக் களிப்பு, ஸ்ரீசற்குருகும்மி ஆகியவையும் அமைந்துள்ளன. viii. 327/1909/IV.

O31,1x

**ஷெய்குதுமான் லெப்பை சாகிபு & ஷெய்கு பசீறு லெப்பை சாகிபு.**

1716. i ஞானோதய புகுசம்; ii. ஷாகுல் ஹமீதுப் புலவர், சென்னை; ஸ்ரீபதமநாப விலாச அச்சுக்கூடம்; iii. 1901; iv. செ. மூ. ப. 151; v. 22×14 செ. மீ.; vi ..........;vii. பல தோத்திரப் பாடல்களும், ஆனந்தக் களிப்பு, பிள்ளைத்தமிழ், பதங்கள் ஆகியவையும் அடங்கியுள்ளன. viii. 159/1901/II.

O31,1x

## 894·811109—இலக்கிய வரலாறு

**அப்துல் காதிறு ராவுத்தர், எம். கே. எம்.**

1717. i. மதுரைத் தமிழ்ச் சங்கமானமியம்; ii. சு. வெ. அழ. நாகசாமி செட்டியார், இளையான்குடி; விவேக பாநு முத்திரா சாலை, மதுரை; iii 1907; iv. செ.மு.எ. 37+186; v. 21×14 செ. மீ.; vi........ ....; vii. மதுரையின் பெருமையினையும் அந்நகரின்கண் பல்வேறு காலங்களில் தோன்றிய நான்கு தமிழ்ச் சங்கங்களையும் பற்றி உரைப்பது. இது பாகனேரி மு. ப. இராமசாமி முதலியார் விருப்பத்தின்படி இயற்றப் பெற்றது. இந்நூற்கு ச. சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர் முகவுரை எழுதியுள்ளார். பல புலவர்கள் பாடிய சாற்றுக் கவிகள் அடங்கியுள்ளன. viii. 225/1907/II.

O31v

**அனவரத விநாயகம் பிள்ளை, எஸ்.**

1718. i. *சைவ சித்தாந்த வரலாறு*; ii. மதராஸ் ரிப்பன் பிரஸ், சென்னை ; iii. 1909; iv. உ. ப. 54 ; v. 18×13 செ. மீ.; vi. 0—4—0; vii. சைவ சித்தாந்த சாஸ்திரங்கள் பதினான்கு தோன்றிய வரலாறும் சந்தான குரவர் சரிதங்களும் விரிவாகக் கூறுவது. ஒவ்வொரு நூலைப் பற்றிய செய்திகளையும் விளக்கமாகவும் சுருக்கமாகவும் தந்துள்ளார். viii. 192/1909/IV.

**O31v**

**சாமிநாத முதலியார், ஐ.**

1719. i. *தமிழுந் தமிழ்*; ii. தொண்டை மண்டல வேளாளர் அபிவிர்த்தி சங்கம் ; விவேகாநந்தா பிரஸ்; iii. செப்டம்பர், 1908; iv. உ.ப. + செ.மு.ப. 16 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—1—0; vii. தமிழின் பழமை முதலியன குறித்து விவரிப்பது. 'இந்தியாவில் முந்தி வந்தது தமிழே' என நாட்டுகின்றார் ஆசிரியர். viii. 553/1908/III.

**O31v**

**செல்வக்கேசவராய முதலியார்**

1720. i. *தமிழ்* ; ii. எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை; iii. 1906; iv. உ. ப. 116; v. 19×12 செ. மீ.; vi. ...........; vii. தமிழ் மொழிபற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை; வரலாற்று முறையில் பற்பல காலங்களிலும் தமிழ் மொழியின் நிலைமை பற்றி விவரித்து உரைக்கின்றது. இடையிடையே சிறு தலைப்புக்கள் தரப்பட்டுள்ளன. viii. 24/1906/III.

**O31v**

## ✓894·8112—நாடகம்

**அந்தோணிமுத்து, சட்டாம் பிள்ளை.**

1721. i. *ஞானசவுந்தரியம்மாள் நாடக அலங்காரம்* ; முதற்பதிப்பு ; ii. வித்தியாபானு அச்சியந்திரசாலை, கோயம்புத்தூர்; iii. 1909; iv. செ. மு. ப. 90; v. 21×14 செ. மீ. ; vi. 0–6–0 ; vii. கிறிஸ்துவின் அருளால் நற்பேறு பெற்றவர் ஞானசவுந்தரியம்மாள். ஆசிரியரால் 1906—ஆம் ஆண்டு பாடப்பெற்று, 1907—ஆம் ஆண்டு இந் நாடகம் அரங்கேற்றப் பெற்றது. viii. 397/1909/III.

**O31,2**

**அப்பாசாமி**

1722. i. வாலிமோட்ச நாடகம்; ii. முனிசாமி முதலியார், சூளை; தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1907; iv. செ. மூ. ப.+உ. ப. 88; v. 21×14 செ. மீ. ; vi. 0—5—0; vii. இராமாயணத்தில் வாலி வதை பற்றிய நிகழ்ச்சி நாடகமாக்கப் பெற்றிருக்கிறது. viii. 98/1908/I.
O31,2

**அரங்கசாமி பிள்ளை, இரா., சொக்கனூர்.**

1723. i. அரிச்சந்திர நாடகம்—கிட்டி கட்டுகிற பாகம்; ii. பழனியப்ப முதலியார், வடசித்தூர்; இம்மானுவேல் ப்ரஸ், பொள்ளாச்சி; iii. 1909; iv. செ. மூ. ப+உ. ப. 8; v. 26×14 செ. மீ.; vi. 0—1—0; vii. 'அதி நூதன அற்புத சங்கீத அரிச்சந்திர நாடகம்' என்பது இதன் முழுப் பெயர். இதில் நட்சத்திரகன் என்பான் விசுவாமித்திரா் ஏவலால் அரிச்சந்திரனைத் தொடர்ந்து நெருக்குகிற பகுதி மட்டும் இதில் உள்ளது. viii. 104/1910/I.
O31,2

**அருளப்ப முதலியார், த.**

1724. i. தேம்பாவணிக் கீர்த்தனை—இரண்டாங் காண்டம் ; ii. இரா. தனசாமி செட்டியார்; ஜி. சி. ஆலன் அண்ட் கம்பெனி அச்சுக்கூடம், சென்னை; iii. ஏப்ரல் 1903; iv. செ. மூ. ப. 85; v. 24×16 செ. மீ. ; vi. .......... ; vii தேம்பாவணிக் காவியத்தில் கூறிய வளன் கதையை நாடகமாகப் பாடிய நூல். கீர்த்தனை, விருத்தம் ஆகிய கவிகளில் சரிதம் கூறிச் செல்கின்றார். viii. 36/1903/II.
O31,2

**அருளப்ப முதலியார், த. & அழகிரிசாமி செட்டியார்**

1725. i. பல வேஷ நாடகம்; ii. சோ. சின்னசாமிக் கவிராயர் ; வித்தியாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை; iii. 1908; iv. செ. மூ. ப.+உ. ப. 168 ; v. 21×14 செ. மீ.; vi. 1—0—0; vii. 'பல வேஷ நாடகம் என்னும் விகடப் பிரசங்கம்' என்பது இதன் முழுப்பெயர். வேடிக்கை நிகழ்ச்சிகள் பல இதன்கண் உள்ளன. viii. 144/1908/II.
O31,2

**ஆதிமுத்து ரெட்டியார்**

1726. i. சித்திரசேனன் சண்டை நாடகம் ; ii. இராமசாமி நாயுடு அண்ட் சன்ஸ், தக்கோலம் ; ஸ்ரீலட்சுமி நாராயண விலாசம் பிரஸ், சென்னை ; iii. 1909 ; iv. செ. மூ. ப.+உ. ப. 64 ; v. 21×13 செ. மீ.; vi. 0—4—0 ; vii. பஞ்ச பாண்டவர் வன வாசம் புரிந்த காலத்தில் ஒரு நாள் துரியோதனன் தன்

தம்பிமார் முதலியோருடன் வனத்தில் சென்று விளையாடி யாநதபோது, சித்திரசேனன் என்னும் கந்தருவன் நூற்றுவரை யும் அவர்தம் மனைவிமாரையும் கட்டிச் சிறையிட்டு விடுகிறான். இதை தெரிந்து தருமா தம்பியரை ஏவ, அர்ச்சுனன் முதலி யோர் சென்று சித்திரசேனனை வென்று நூற்றுவரைச் சிறை மீட்டனர். இதுவே இந்நாடகப் பொருள். viii. 471/1910/III.

O31,2

**இராகவ மூர்த்தி, பாளும்பட்டி.**

1727. i. விராட பாவ நாடகம் என்னும் மாடு பிடி சண்டை; ii. முனிசாமி முதலியார், ஜூன்; குலமகள் நடனம் அச்சுக்கூடம், சென்னை; iii. 1907; iv. செ. மூ. ப. + உ. ப. 120; v. 21×14 செ. மீ.; vi. 0—8—0; vii. பாரத நூலில் விராட பர்வத்தில் வரும் 'நிரை கவாதல்' பற்றிய நிகழ்ச்சியைப் பொருளாகக் கொண்டது இந் நாடகம். பதிப்பாசிரியரால் ஏட்டுப் பிரதியைக் கொண்டு எழுதிப் பரிசோதிக்கப் பெற்றது. viii. 96/1908/I.

O31,2

**இராகவாச்சாரியார், ஸா., திருக்கண்ணமங்கை.**

1728. i. சனைமமான அல்லது பஞ்சாயித்து நாடகம்; ii. ஸ்காட்டிஷ் பாருஜ பிரஸ், நாகப்பட்டணம்; iii. 1909; iv. உ. ப. 66; v. 21×13 செ. மீ.; vi. 0—6—0; vii. தேவாலயங் களைப் பரிபாலித்து வரும் பஞ்சாயித்து என்னும் தாமகாத்தாக் களில் சிலர் சில திருப்பதிகளைச் சீரழித்து வருகின்றனர் என்பதை விசதமாகும் பொருட்டு இந் நாடகம் எழுதப் பெற்றது. இதில் குறித்தவை ஆசிரியர் தாமே நேரில் பார்த் ததும், பிறர் வாயிலாகக் கேட்டுமறிந்த உண்மைகளின் பிரதி பிம்பமேயாகும். ஐந்து அங்கங்கள் கொண்டது. நாடகப் பாத்தி ரங்களைப் பற்றிய குறிப்பு முதற்கண் உள்ளது. viii. 683/1909/IV.

O31,2

**இராமசாமி அய்யங்கார், சருக்கை.**

1729. i. இந்துமதி அல்லது கற்பரசி; ii. சி. பெருமாள் நாடார்; சி. என். பிரஸ், திருப்பத்தூர்; iii. 1907; iv. செ. மூ. ப. + உ. ப. 105; v. 19×13 செ. மீ.; vi. 0-8-0; vii. பாண்டிய சோழநாடுகளின் அரச குடும்பங்களை இணைத்து அமைக்கப் பெற்ற ஒரு கதை. ஆறு அங்கங்களை கொண்டது இந் நாடகம். சென்னை கிருஷ்ணவிலாச சபையார்க்கென்று எழுதப்பெற்றது. viii. 10/1908/I.

O31,2

1730. i. உஷா பரிணயம்; ii. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரி; சிட்டி பிரஸ், சென்னை; iii. 1902; iv. உ. ப. 60; v. 19×13 செ. மீ.; vi. 0—6—0, vii. வாணாசுரனின் புதல்வி உஷை அநிருத்தனை அடைந்த வரலாறும், வாணாசுரன் கண்ணனுடன் போர் புரிந்து நற்போதமுற்ற வரலாறும் உரைப்பது. நான்கு அங்கங்கள் கொண்டது இது. viii. 254/1902/IV.

O31,2

1731. i. ஹேமந்த குமாரி; ii. ஸ்ரீவாணீவிலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்; iii. 1906; iv. உ. ப. 29 ; v. 21×14 செ. மீ. ; vi....... vii. இது ஸ்ரீ வாணீ விலாஸனி தொடரில் பன்னிரண்டாவது; இரண்டு அங்கங்கள் கொண்டது. கற்பின் பெருமையை விளக்குவது. viii. 394/1909/II.

O31,2

இராமசாமி நாடார், எஸ். கே. நாகை, வெளிப்பாளையம்.

1732. i. காமதகனம் கிரிமினல் கேஸ் : முதற் பதிப்பு ; ii. எஸ் மனுணூர் நாயுடு; ஹமீதிய்யா பிரஸ், நாகபட்டினம்; iii. 1910 ; iv. உ. ப. 27; v. 21×14 செ. மீ.; vi. 0—3—0; vii. இதில் மன்மதன் எரிந்ததைப் பற்றி இரதி, பரமசிவன், பிரம தேவன், தேவேந்திரன் இவர்கள் பேரில் பிராது செய்வதும், விசாரிப்பதும் உபய வக்கீல்கள் விவாதங்களும் தீர்ப்பும் அடங்கியிருக்கிறது. ஈஸ்வராதிகளும் பிறந்து, இறந்து பிராரத்துவங்களை யடைந்து, கடைசியில் மானிடர்களாயப் பிறந்து அத்வைதம் உணர்ந்து விவேக முத்தியையடைவார்கள் என்னும் அத்வைத உண்மையை உணர்த்துவது. பரப்பிரம்ம இரகசியத்தில் ஸ்ரீவைகுண்டம் டிஸ்திரிக்ட் மாஜிஸ்திரேட் கோர்ட்டு என ஒரு கோர்ட்டு இருப்பது போலவும், அதில் பரமசிவன் முதல் மும்மூர்த்திகளும் விசாரிக்கப்பட்டு, சிட்சை அடைவது போலும் எழுதப்பெற்றது. viii. 51/1910/III.

O31,2

இராமானுஜ ஐயங்கார், கொ. வி. தி.

1733. i. சந்திர தாரா சரித்திரம்; ii. வித்யாரக்ஷணி அச்சியந்திர சாலை, உடுமலைப்பேட்டை; iii. 1901; iv. செ. மு. ப. + உ.ப. 60 ; v. 19×14 செ. மீ. ; vi. 0—4—0 ; vii. சந்திரதாரா விலாசம் என்றும் சொல்லப்பெறும். கீர்த்தனை, வசனம் முதலியன கலந்து வருவது viii. 8/1901/II.

O31,2

**இராமையங்கார், எஸ்.**

1734. **i.** லீதா அல்லது என்னிஷ்டப்படியே; **ii.** ஜி. சி. லோகநாதம் அண்டு பிரதர்ஸ்; கார்டியன் அச்சியந்திரசாலை, சென்னை; **iii.** 1908; **iv.** உ. ப. 98; **v.** 22×14 செ. மீ., **vi.** 0—10—0; **vii.** ஐந்து அங்கங்கள் கொண்ட நாடகம். களம், காலம், உறுப்பினர் முதலிய குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன. **viii.** 382/1908/IV.

**031,2**

**இராஜேந்திரம் பிள்ளை, அ.**

1735. **i.** ஆதாம் ஏவாள் விலாசம்; **ii.** மெர்க்குரி பிரஸ், சென்னை; **iii.** 1910; **iv** செ. மு. ப. + உ. ப. 70; **v.** 21×14 செ. மீ.; **vi.** 0—6—0; **vii.** உலக சிருஷ்டிப்பை ஒரு கதையாகக்கொண்டு மனித வர்க்கத்திற்கு ஆதித் தாய் தகப்பன்மாரான ஆதாம் ஏவாள் இவர்களின் சரித்திரம் பற்றி உரைப்பது. வேத சாஸ்திரம், வேத சரித்திரம், வேத வியாக்கியானம் முதலிய கருத்துக்களைத் தழுவியும் ஆங்கிலக் கவிஞர் மில்டனார் செய்த 'பாரடைஸ் லாஸ்ட்' என்னும் நூலை ஆதாரமாகக் கொண்டும் நாடகப் போக்குக்கு ஏற்றபடி வழக்கச் சொற்கள் முதலிய அலங்கார அமைதி பெற இயற்றப் பெற்றது. ஆறு அத்தியாயங்கள் என்னும் பெரும் பிரிவு இந்நாடக நூலில் காண்கிறது. **viii.** 791/1910/II.

**031,2**

**ஏகாம்பர முதலியார், செஞ்சி.**

1736. **i.** கர்ண மகாராஜன் நாடகம்: முதற் பதிப்பு; **ii.** சுப்பிரமணியப் பிள்ளை; பாரதி விலாசம் பிரஸ்; **iii.** 1904; **iv.** செ. மு. ப. 80; **v.** 22×14 செ. மீ.; **vi.** ........ ...; **vii.** பாரதக் கதையைப் பின்பற்றியது. பதினேழாம் நாள் போர் பற்றிய நாடகம் என்றும் கூறலாம். கண்ணிகள், கீர்த்தனங்கள் முதலியவை மிகுதியாய் உள்ளன. **viii.** 3/1904/III.

**031,2**

1737 **i.** மயில்ராவணன் நாடகம்: முதற் பதிப்பு; **ii.** சுப்பிரமணிய பிள்ளை; வாணி விலாச அச்சுக்கூடம்; **iii.** 1904; **iv.** செ. மு. ப. 222; **v.** 22×14 செ. மீ.; **vi.** 0—6—0; **vii.** பாதாள இலங்கையை ஆண்ட மயில்ராவணன் கதையை நாடகமாகத் தருவது. கீர்த்தனம், விருத்தம் முதலிய கவிகளும் வசனப் பகுதியும் விரவி வருவது. **viii.** 155/1904/III.

**031,2**

கணபதிக் கவிராயர்

1738. i. நதி விலாசம்; ii. இராமசாமிக் கவிராயர்; விவேக பாநு பிரஸ், மதுரை; iii. 1910; iv. செ. மூ. உ. ப. 52; v. 16×12 செ. மீ.; vi. ........; vii. அகப்பொருட்டுறை பலவற்றினுள் தலைவி தலைவனிடத்துள்ள வேட்கை மிகுதியால் கலக்கம் எய்தித் தன் எதிர்ப்பட்டதொரு பொருளை நோக்கித் தன் நிலைமையைக் கூறுவதாக அமைத்துப் பாடுவதே விலாசம் எனப்படும் என்று முகவுரையில் தெரியவருகிறது. இதற்கு முன் தோன்றிய கடிகை முத்துப் புலவரின் சமுத்திர விலாசத்தையும், மாம்பழக் கவிசிங்க நாவலரின் சந்திர விலாசத்தையும் உதாரணமாக எடுத்துக் காட்டியுள்ளார் முகவுரையாசிரியர். இந்நதி விலாசம் சேற்றூர் சமஸ்தானாதிபதியாகிய ஸ்ரீசேவகப் பாண்டிய மகாராஜா அவர்கள் மீது பாடப்பெற்றது; 32 கவிகளை உடையது. நதியை நோக்கி கூறப் பெற்றமையால் இது நதி விலாசம் எனப் பெயர் பெறுவதாயிற்று. இந்நூலின் பின் சிலேடைகளை விளக்கிக் குறிப்புரையும் எழுதிச் சேர்க்கப் பெற்றிருக்கிறது ; viii. 674/1910/IV.

O31,2

கதிர்வேலு நாடார், க. ச.

1739. i. பகையதாமெனனும் படுதோஷி விலாசம்; ii. ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. 1905; iv. செ. மூ. உ. ப. 182; v. 22×14 செ. மீ; vi. 0—12—0; vii. உலகியல் நடைமுறைகள் பலவற்றைக் கூறி நகையாடும் முறையில் அமைந்தது. வசனம், கீர்த்தனம் முதலியன விரவி வருவது ; viii. 203/1905/IV.

O31,2

கந்தசாமிப் பிள்ளை, மதுரை.

1740. i. அல்லியரசாணி நாடகம்; ii. பார்த்தசாரதி நாயுடு; ஸ்ரீபத்ம விலாச அச்சுக்கூடம்; iii. 1902; iv. செ. மூ. ப. + உ. ப. 168; v. 22×14 செ. மீ.; vi. ..........; vii. அல்லியரசாணியின் கதையைக் கீர்த்தனை, விருத்தம், வசனம் விரவிய நாடகமாகத் தரும் நூல் ; viii. 229/1904/I.

O31,

1741. i. காமேந்திரன், ஞானலோசனி: முதற்பதிப்பு; ii. எம். பி. ஆர். குருநாத நாயுடு; இச்சினர் அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1908; iv. உ. ப. 150; v. 25×13 செ. மீ.; vi. 1-0-0; vii. மூன்று அங்கங்கள் கொண்டது. நடிப்பதற்கன்றிப் படிப்பதற்கு மிகவும் ஏற்றவகையில் இது இயற்றப்பெற்றிருக்கிறது ; viii. 566/1909/III.

O31,2

1742. i. கோவலன் நாடகம் ; ii. பார்த்தசாரதி நாயுடு ; ஸ்ரீ பத்ம விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1902 ; iv. செ.மு.ப.+ உ.ப. 163 ; v. 22×14 செ.மீ. ; vi. ...... ; vii. கோவலன் கதையைக் கீர்த்தனம், விருத்தம், வசனம் கலந்து வர நாடகமாகத் தருவது. சிலப்பதிகாரக் கதையோடு மாறுபட்ட நிகழ்ச்சிகள் சிலவும் இதனகத்து உள ; viii. 230/1904/I.

O31,2

1743. i. சந்தராவதனி : முதற் பதிப்பு ; ii. சி. இராகவ முதலியார் ; பாலவிநோதினி பாதினி பிரஸ், சென்னை ; iii. 1908 ; iv. உ.ப. 80 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. இரண்டு அங்கங்கள் கொண்ட நவீன நாடகம். அங்கம், களம், உறுப்பினர் முதலிய விவரங்கள் தரப்பட்டுள்ளன ; viii. 386/1908/III.

O31,2

1744 i. நல்லதங்காள் சரித்திரம் : மூன்றாம் பாகம் ; ii. தையநாயகி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1905 ; iv. செ.மு.ப.+ உ.ப. 38 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. பற்பல நாடகச் சமபெனியாரும் இதனை நடித்து வந்ததாகத் தெரிகிறது. கீர்த்தனை, விருத்தம், வசனம் ஆகியவை விரவிவரும் நடையில் அமைந்தது ; viii. 151/1905/I.

O31,2

1745. i. நல்லதங்காள் சரித்திரம் : இரண்டாம் பாகம் ; ii. தைய நாயகி அம்மன் அச்சுக்கூடம், சூளை, சென்னை ; iii. 1905 ; iv. செ.மு.ப.+ உ.ப. 4 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. நல்லதங்காள் சரித்திரப் பின் பகுதி. உத்தமி நல்லதங்கையின் சோகக் கதை. கீர்த்தனம், விருத்தம், வசனம் முதலியன விரவிவருவது ; viii. 215/1905/I

O31,2

1746. i. பதிவிரதை என்னும் லலிதாங்கி சரித்திரம் ; ii. தையநாயகி அம்மன் அச்சுக்கூடம், சூளை, சென்னை ; iii. 1905 ; iv. செ.மு.ப. + உ.ப. 50 ; v. 23×14 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. கீர்த்தனை, விருத்தம், வசனம் கலந்த நடையில் அமைந்துள்ளது. சிற்சில அறப்பு நிகழ்ச்சிகள் நிறைந்தது. சீட்டுக்கவிகளும் ஒரு சிலவுள்ளன : viii. 146/1905/I.

O31,2

1747. i. பார்வதி சுந்தரா நாடகம் ; ii. மஞ்ஞைமணி விலாச அச்சுக்கூடம் ; iii. 1904 ; iv. செ.மு.ப. 80 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. காபூல் வாத்தகன் ஒருவனுடைய சரித்திரம் : அவன் புத்திரி பார்வதி சுந்தரா என்பாளின் கற்பின் திறமும் போற்றப்படுகிறது ; viii. 211/1904/IV.

O31,2

1748. i. வல்லாள மஹாராஜன் நாடகம்; ii. நே. முனிசாமி முதலியார்; கணேச அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1904; iv. செ.மூ.ப. 64; v. 21×14 செ.மீ.; vi. 0–3–0; vii. திருவண்ணாமலை புராணத்தில் வரும் வல்லாள மகாராசனின் வரலாறு பற்றியது; இவன் அருணை நகரை ஆண்ட மன்னன். இவனது சரித்திரமும் இவன் செய்த சிவத்தொண்டு முதலியனவும் பற்றி விவரிப்பது: viii. 122/1904/IV.

O31,2

1749. i. வீணுகானன ஞானேந்திரி; ii. என். துரைசாமி முதலியார்; திரிபுரசுந்தரி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. 1910; iv. உ.ப. 88; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0; vii. மூன்று அங்கங்கள் கொண்டது இந்நாடகம். ஒவ்வொரு காட்சித் தொடக்கத்திலும் அவ்வக்காட்சிக்குரியோரைப் பற்றிய குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. புராண கதை போன்ற அற்புத நிகழ்ச்சிகள் சில கொண்டது: viii. 818/1910/III.

O31,2

1750. i. ஜாலரம்பை நீலலோசனி சரித்திரம்: முதற் பதிப்பு; ii. சி. எஸ். ரெங்கையா நாயுடு; பாலவிருத்தி போதினி அச்சுக்கூடம், சென்னை; iii. 1908; iv. உ.ப. 78; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0; vii. உரைநடையில் அமைந்த நாடகம் இது. அங்கம், களம், இடம், கதாநாயகர் பற்றிய குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன; viii. 354/1908/III.

O31,2

**கலியாணசுந்தரம் பிள்ளை, மு. வ.**

1751. i. மெய்யரிச்சந்திர நாடகம்; ii. இ. ரா. ம. குருசாமிக் கோனார்; நிரஞ்சன விலாச அச்சியந்திரசாலை; iii. 1905; iv. செ.மூ.ப. + உ.ப. 770; v. 21×14 செ.மீ.; vi. 1–8–0; vii. இது ஆரப்பாளையம் எம். சுந்தரராஜவேளார் ஆடி வருகிற நாடகமாகும்; விரிவான நூல். தலைப்புக்கள் அங்கங்கே இடம் பெற்றுள்ளன; viii. 256/1906/IV.

O31,2

**கலியாணராமய்யர், சி. எஸ்.**

1752. i. பாமா விஜயம்; ii. மதுரைத் தமிழ்ச் சங்கம் அச்சியந்திர சாலை; iii. 1908; iv. செ.மூ.ப.+உ.ப. 170; v. 21×14 செ.மீ.; vi. 0–12–0; vii கண்ணனது சரித்திரத்தின் ஒரு பகுதி. சத்தியபாமைக்காகக் கண்ணன் பாரிசாத மலர் கொண்டுவந்த விருத்தாந்தம் பற்றியது; இது ஐந்து அங்கங்கள் அடங்கிய நவீன

நாடகம். பாத்திரங்களின் (ஆக்டா) விவரம் முகப்பில் தரப் பெற்றிருக்கிறது. தமிழ் நாடகக் கலை வளர்ந்து வந்த வகை குறித்து, ஆசிரியர் தமது முகவுரையில் எழுதியுள்ளார். நாடகப் பாத்திரங்களின் பெயரும், அந்தஸ்தும், கதாசங்கிரகம் என்னும் பகுதியும் முக்கியமாகக் கவனிக்கத்தக்கன ; viii. 55/1908/IV.

O31,2

1753. i. லதாங்கி லலிதாங்கி ; ii. மதுரைத் தமிழ்ச் சங்கம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1909 ; iv. செ.மு.ப.+உ.ப. 149 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. 'லதாங்கி லலிதாங்கி விலாசம்' என்னும் பெயர் பெறும். இது ஒரு நவீன நாடகம்; 5 அங்கங்கள் கொண்டது ; viii. 341/1909/I.

O31,2

**கிருஷ்ணசாமி ஐயர், அ.**

1754. i. சபலை ; ii. ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; iii. 1910 ; iv. உ.ப. 144 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. 'East Lynne' என்னும் ஆங்கில நாவலைத் தழுவி எழுதப்பெற்றது இந்நாடகம். 'கதா சங்கிரஹம்' முதற்கண் தரப்பெற்றிருக்கிறது. நாடகப் பாத்திரங்கள் பற்றிய குறிப்பும் தொடக்கத்தில் உள்ளது ; viii. 312/1910/IV.

O31,2

1755. i. வாஸந்திகை ; ii. ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; iii. 1908 ; iv. செ.மு.ப.+உ.ப. 112 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. நவீன நாடக முறையில் அமைந்தது. இதில் 3 அங்கங்கள் உள்ளன. சைவ ஸ்ரீ ம. தி. பானுகவி முதலியோர் இயற்றிய சிறப்புப் பாயிரங்கள் உள. பவானந்தம் பிள்ளை முதலியோர் ஆங்கிலத்தில் நூலைப்பற்றி எழுதிய கருத்துரைகளும் உள ; viii. 7/1908/II.

O31,2

**கிருஷ்ணசாமி நாய்க்கர்**

1756. i. துளசி தாஸர் சரித்திர நாடகம் ; ii. முனிசாமி முதலியார், சூளை ; தனலக்ஷ்மி நாத்தன அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1910 ; iv. செ.மு.ப.+உ.ப. 92 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-6-0 ; vii. திருமாலடியாராகிய துளசி தாசரின் வரலாறு பற்றியது இந்நாடகம். 'துளசி தாசன் போ புகழ் சரித்திரத்தைப் பெருந்தமிழ் விலாசம் பாட' என்று காப்புச் செய்யுளில் குறிப்பிடுகிறார் ஆசிரியர். இதனால் நாடகத்தை விலாசம் என வழங்கும் வழக்கு புலனாகிறது. கதை செல்நெறிக்குத் தக்க தலைப்புக்கள் இடையிடையே உள்ளன ; viii. 799/1910/IV.

O31,2

சாமியார், சாலக்கரை.

. கய நாடகம் ; ii. தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திரசாலை, நீள, சென்னை ; iii. 1910 ; iv. செ.மூ.ப.+உ.ப. 88 ; . 21×14 செ.மீ. ; vi. 0-5-0 ; vii பாண்டவர்களின் உருவனுகிய அருச்சுனனுடைய அனைக் கண்ணனை சோதித்தலும், கந்தர்வ குலத்தவனுகிய கயனுக்கு முன் தலத்தின்படி காட்சிக் கொடுத்தலும் பற்றிய நிகழ்ச்சிகளைக் கூறுவது இந்நாடகம். செய்யுள் நடையும், வசன நடையும் விரவிவர இயற்றப்பெற்றதாகும் இந்நாடகம் ; viii. 315/1910/II.

O31,2

இருஷ்ணப்ப நாயகர், சாலை.

1758. i. சங்கு சூடாமணி நாடகம் ; ii. ஆர். வரதைய நாயுடு ; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1910 ; iv. செ.மூ.ப.+உ.ப. 46 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-5-0 ; vii. 'ஸ்ரீ மகா பாகவதத்தில் ஓர் பிரிவாகிய சூயகாசூரன் என்னும் சங்கு சூடாமணி நாடகம்' என்பது இதன் முழுப் பெயர். இந்தப் பாகவத உபகதையை நாடக முறையில், கீர்த்தனம், விருத்தம், வசனம் ஆகியவை கலந்துவரத் தருவதாகும் இது ; viii. 532/1910/I.

O31,2

1759. i. நளாங்கினி மாலையீடு என்னும் நளாயினி நாடகம் ; ii. முனிசாமி முதலியார், சூளை ; லக்ஷ்மி நர்த்தன அச்சியந்திர சாலை, சென்னை ; iii. 1907 ; iv. செ.மூ.ப.+உ.ப. 72 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-5-0 ; vii. கற்பிற்சிறந்த நளாயினியின் வரலாறு, அவள் மௌத்கல்ய ரிஷியை மணந்த விவரமும், கணவனுக்கு அவள் தொண்டு செய்த வகையும், கற்பின் ஆற்றலால் கதிரவனை உதயமாகாமல் நிறுத்திய வண்ணமும் வேறு பிற நிகழ்ச்சிகளும் விவரிப்பது ; viii. 97/1908/I.

O3

இருஷ்ண பிள்ளை, விக்கிரவாண்டி சாலை.

1760. i. இலக்ஷ்மணதேவி மாலையிடு நாடகம் ; ii. சா. மு உபாத்தியாயர் ; ஸ்ரீ மாதவ விலாச அச்சுக்கூடம், செ iii. 1909 ; iv. செ.மூ.ப. 77 ; v. 21×14 செ.மீ. 0-4-0 ; vii. இது பாரதக் கதையைச் சேர்ந்தது. துரியோ குமாரத்தி இலக்ஷ்மணதேவியின் திருமணம் பற்றி நாடகமாகத் தரப்பெற்றிருக்கிறது ; viii. 118/1909/I

**கோவிந்தராஜ ஐயங்கார், மோ. வீ.**

1761. i. குசேலா ; ii. திருச்சிணுப்பள்ளி வெட்னஸ்டே ரிவியு பிரஸ் ; iii. 1910 ; iv. உ.ப. 98 ; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0 ; vii. திருமால் பக்தராகிய குசேலரைப் பற்றிய புராண சரிதம் உரைப்பது இந் நாடகம் ; ஐந்து அங்கங்கள் கொண்டது ; viii. 750/1910/IV.

O31,2

**சம்பந்த முதலியார், பம்மல்.**

1762. i. அமலாதித்யன் அல்லது குஜராத்து அரசிளங்குமரன் ; ii. டௌடன் கம்பெனி, சென்னை ; பியாலஸ் பிரஸ், சென்னை ; iii. 1908 ; iv. உ.ப. 178 ; v. 22×14 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. இந்த நாடகம் ஷேக்ஸ்பியர் மகாகவி ஆங்கிலத்தில் எழுதிய 'ஹாம்லெட்' என்னும் நாடகத்தை அநுசரித்து இயற்றப்பட்டது. ஐந்து அங்கங்கள் கொண்டது. நாடகப் பாத்திரங்கள் பற்றிய குறிப்பு தொடக்கத்தில் உள்ளது ; viii. 18/1909/I.

O31,2

1763. i. இரண்டு நண்பர்கள் ; ii. மினர்வா அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1906 ; iv. உ.ப. 139 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. இது ஒரு நவீன நாடகம். ஐந்து அங்கங்கள் கொண்டது. viii ; 288/1906/III.

O31,2

1764. i. காலவ ரிஷி ; ii. டவுடன் கம்பெனியார் ; பீயாலஸ் பிரஸ், சென்னை ; iii. 1909 ; iv. உ.ப. 60 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. பாரதக் கதை நிகழ்ச்சி ஒன்று பற்றியது இந் நவீன நாடகம். மூன்று அங்கங்கள் கொண்டது ; viii. 150/1908/III.

O31,2

1765. i. சத்ருஜித ; ii. டௌடன் அண்ட கம்பெனியார் ; பீயர்லஸ் பிரஸ், சென்னை ; iii. 1907 ; iv. உ.ப. 131 ; v. 22×14 செ.மீ.; vi. 0-12–0 ; vii. ஒரு புதிய தமிழ் நாடகம் ; ஐந்து அங்கங்கள் கொண்டது. ஒவ்வோர் அங்கமும் பல காட்சிகளாகப் பாகுபடுத்தப்பட்டு, களம், காலம், கூற்றிற்குரியார் முதலிய குறிப்புகளும் தரப்பட்டுள்ளன : viii. 63/1907/III.

O31,2

1766. i. சாரங்கதாரா ; ii. டௌடன் அண்டு கம்பெனி ; பீயர்லஸ் பிரஸ், சென்னை ; iii. 1907 ; iv. உ.ப. 96 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. ஹஸ்திணுபுரத்து மன்னன் நரேந்திரன் புதல்வனாகிய சாரங்கதரனைப் பற்றிய வரலாறு. மூன்று அங்கங்கள் கொண்டது ; viii. 293/1907/IV.

O31,2

1767. i. 'பேயல்லை பெண்மணியே'; ii. டௌடன் அண்டு கம்பெனி; பீயாலெஸ் பிரஸ், சென்னை; iii. 1909; iv. உ.ப. 76; v. 22×14 செ.மீ.; vi. 0-8-0; vii. மேலை நாட்டுக் கதை ஒன்றினைத் தழுவி இந் நாட்டுச் சூழ் நிலைக்கு ஏற்ப இயற்றப் பெற்றது. ஐந்து அங்கங்கள் கொண்டது. காட்சி நிகழ் இடம், காலம், உறுப்பினர் குறிப்புகள் அந்தந்தக் காட்சி தோறும் தரப்பட்டுள்ளன. நாடகப் பாத்திரங்கள் பற்றிய பொதுக் குறிப்பு முதற்கண் உள்ளது; viii. 699/1909/III.

O31,2

1768. i. மகபதி: முதற் பதிப்பு; ii. டௌடன் அண்டு கம்பெனி; பீயர்லெஸ் பிரஸ், சென்னை; iii. 1910; iv. உ.ப. 112; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. ஷேக்ஸ்பியர் மகாகவி ஆங்கில பாஷையில் எழுதிய 'மேகபெத' என்னும் நாடகத்தின் தமிழ் அமைப்பு; ஐந்து அங்கங்கள் கொண்ட இதில் அங்கத்தின் உட்பிரிவாகக் காட்சிகள் பல இடம் பெற்றுள்ளன. நாடகப் பாத்திரங்கள் பற்றிய குறிப்பு தொடக்கத்தில் தரப்பெற்றிருக்கிறது, viii. 127/1910/IV.

O31,2

1769. i. மனோகரா; ii. ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. 1906; iv. உ.ப. 154; v. 21×14 செ.மீ.; vi. 0-12-0; vii. இது ஓர் நவீன நாடகம்; ஐந்து அங்கங்கள் கொண்டதாகும் இது. viii. 287/1906/IV.

O31,2

1770. i. யயாதி; ii. டௌடன் அண்டு கம்பெனி; பீயாலெஸ் பிரஸ், சென்னை; iii. 1908; iv. செ மு.ப.+உ.ப. 56; v. 22×14 செ.மீ.; vi. 0-8-0; vii. பாரதத்துள் வரும் யயாதி மன்னனின் சரிதம் பற்றிய நாடகம். ஐந்து அங்கங்கள் கொண்டது; இது நவீன முறையில் இயற்றப்பெற்றதோர் நாடகமாகும்; viii. 31/1908/II.

O31,2

1771. i. ரதனுவளி; ii. டௌடன் அண்டு கம்பெனி; பீயாலெஸ் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1910; iv. உ.ப. 110; v. 21×14 செ.மீ.; vi. 0-12-0; vii. வடமொழியிலுள்ள 'ரதனுவளி' என்னும் நாடகத்தைத் தழுவி எழுதப்பெற்றது; மூன்று அங்கங்கள் கொண்டது. நாடகப் பாத்திரங்களைப் பற்றிய குறிப்பு முதற்கண் உள்ளது; viii. 196/1910/I.

O31,2

1772. i. வேதாள உலகம் ; ii. டௌடன அண்டு கமபெனி ; பீயர் லெஸ் பிரஸ, சென்னை ; iii. 1908 ; iv. செ.மூ.ப.+உ.ப. 77 ; v. 21×15 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இது ஒரு நவீன நாடகம். மூனறு அங்கஙகள் கொணடது. நாடகபாததிரஙகள் விவரமும முதலில் தரபபட்டிருககினறது ; viii. 351/1908/II.

O31,2

**சாமி நாயுடு, எம்.**

1773. i. நலலதங்காள புலமபல : முதற பாகம் ; ii. ஸ்ரீ சாமுண்டீஸவரி அசசுககூடம் ; iii. 1910 ; iv. செ.மு.ப. 15 ; v. 21×13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. நல்ல தங்காள் கதையை நாடகமாகத தருவது. இம முதற் பாகததில நலலதஙகாளும, அவளது பிளளைகள எழுவரும, அவளது நாட்டில பஞச வறுமையிலுல வாதைப்பபடடு மதுரை நகா அடையும்வரை உளள சரிததிரம் அமைநதுளளது. சில நூதன வர்ண மெட்டுக்களையும் ஆசிரியர் இதில் அமைததுளளார ; viii. 396/1910/III.

O31,2

**சிவசண்முகம பிள்ளை, ஏகை.**

1774. i. கணடி ராஜா நாடகம ; ii. கா. சுப்பராய முதலியாா அணடு கம்பெனி ; திரிபுரசுநதர விலாச அச்சுககூடம் ; iii. 1906 ; iv. செ.மூ.ப.+உ.ப. 126 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. இலஙகையில் கணடிமா நகரில அரசு புரிந்த கீரத்திசிங்க மஹாராஜன சரித்திரம் எனனும் கண்டி ராஜா நாடகம் என்பது இதன் முழுப் பெயா. மூனறு அஙகங்களும் அதன் உட்பிரிவாகப் பல களங்களும் அமைநதுள்ளன , viii. 300/1906/IV.

O31,2

**சின்னசாமி ஆச்சாரி**

1775. i. திருவண்ணாமலை வல்லாள மகாராஜன நாடகாலங்காரம் ; ii. கை. துரைசாமி முதலியாா ; பாலவிர்த்தி போதிநி அச்சுககூடம், சென்னை ; iii. 1910 ; iv. செ.மூ.ப. 110 ; v. 21×14 செ.மீ.; vi. 0–8–0 ; vii. திருவண்ணாமலைத் தல வரலாற்றெொடு இயைபுடைய புராண சரிததிரம். அருணாசலக் கடவுள வலலாள மகாராசனுககுப புதல்வராகப் பிறநதது பறறிய சரித்திரம் நாடகமாகப் பெற்றிருக்கினறது. சீர்ததனை, விருத்தம், வசனம கலந்து வரும் நடையில அமைந்தது ; viii. 694/1910/IV.

O31,2

**சின்னையா முதலியார், கி., பனைப்பாக்கம்.**

1776 i. வணிக வஞ்சி விலாசம் ; ii. மொ. நாராயண முதலியாா & வேலு தேசிகர், பாலூர் ; ஞான சமபந்த அச்சுக்கூடம், சென்னை ; iii. 1910 ; iv. செ.மு. உ.ப. 116 ; v. 21×13 செ.மீ. ;

